# பிரபந்த சாரம்

## விளக்கம்





மு. இராமசாமி, இராசிபுரம்.

# பிரபந்த சாரம்

## விளக்கம்




வைணவச் செல்வம்

**மு. இராமசாமி**

இராசிபுரம்.

திவ்யப் பிரபந்த நிறைவுவிழா வெளியீடு

சன்மார்க்க சங்கம்,

திருச்செங்கோடு.

முதற்பதிப்பு 15-10-89
உரிமை ஆசிரியர்க்கு
திருவரங்கம் பதிப்பகம் நூல் 20

விலை ரூ. **2-50**

நூல் கிடைக்குமிடம் :
**திருவரங்கம் பதிப்பகம்**
7, எல்லப்ப செட்டியார் காலனி
இராசிபுரம்-637 408
சேலம் மாவட்டம்.

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பிரபந்த சாரம் விளக்கம் |
| ஆசிரியர் | : | மு. இராமசாமி, எம்.ஏ., பி.எட்., |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| ஆண்டு | : | 15-10-1989 |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | ஆசிரியர் மு. இராமசாமி |
| தாள் | : | டெம்மி 7.2 |
| அளவு | : | 1x10 |
| பக்கம் | : | 30 |
| எழுத்து | : | 10, 12, 14, புள்ளி |
| கட்டு | ; | அட்டைக்கட்டு ஆர்ட் பேப்பர் |
| படிகள் | : | 1000 |
| விலை | : | ரூ. 2-50 |
| அச்சிட்டோர் | : | சன்-மூன் பிரிண்டர்ஸ், சேலம்-3 |

அச்சிட்டோர்:
**சன்-மூன் பிரிண்டர்ஸ்,**
அம்மாப்பேட்டை, சேலம்-636 003 Ph.: 66785 P.P.

5-4

ஸ்ரீ:

ஸ்ரீ நிகமாந்த மகா தேசிகாய நம:

## நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தின் பெருமை

பொய்கை முனி, பூதத்தார், பேயாழ் வார், தண்
பொருநல் வரும் குருகேசன், விட்டு சித்தன்,
துய்யகுல சேகரன், நம் பாண நாதன்,
தொண்டரடிப் பொடி, மழிசை வந்த சோதி
வையமெலாம் மறைவிளங்க வாள். வேல் ஏந்தும்
மங்கையர்கோன், என்றிவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்யதமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின் றோமே.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸ்ரீநிவாச மஹா தேசிகாய நம:

# 'பிரபந்த சாரம்' விளக்கம்

## நிறைவுரை:

அடியேன், நாள்தோறும் வைகறையில் நாலாயிரத் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களை நூறு நூறாகப் படித்து அனுபவிப்பது வழக்கம்.

'அந்தப் பாசுரங்களில் அடியேன் பெற்ற அனுபவ ஆனந்தத்தைப் பிறர்க்கும் கொடுத்து மகிழ ஒரு நல்ல வாய்ப்புக் கிட்டாதா' என்று எண்ணிக் கொண்டிருந்தேன்.

அந்த நல்லெண்ணத்தைச் செயல்படுத்துவதற்கு ஒரு வாய்ப்பு அளித்தார்கள் திருச்செங்கோடு சன்மார்க்க சங்கத்தினர்.

அதனைப் பயன்படுத்திக்கொண்டு 15-2-1987 ந் தேதி ஞாயிறு மாலை 6-30 மணிக்கு, திருச்செங்கோடு சன்மார்க்க சங்கத்தார் முன்னிலையில் 'செய்யதமிழ் மாலைகள்' என்ற தலைப்பின் கீழ் திவ்யப் பிரபந்தச் சொற்பொழிவைத் தொடங்கினேன் அடியேன்.

அன்றுமுதல், ஒவ்வொரு மாதமும், மூன்றாவது ஞாயிற்றுக் கிழமைகளில், திவ்யப் பிரபந்தப் பாசுரங்களின் அனுபவ ஆனந்தத்தைச் சொற்பொழிவாக்கி மகிழ்ந்து வந்தேன் அடியேன்.

இருபத்து ஆறு (26) கூட்டம் முடிந்து, இன்று (15-10-89) இருபத்து ஏழாவது கூட்டத்தில் பிரபந்த வகுப்பு நிறைவு பெறுகிறது.

இந்த நிறைவின் நினைவாக வெளிவருகிறது 'பிரபந்த சாரம் - விளக்கம்' என்னும் இச்சிறுநூல்.

வேதாந்த தேசிகர், திவ்யப் பிரபந்தத்திற்கு, 'செய்ய தமிழ் மாலைகள்' என்று தம் அனுபவத்தால் கிட்டிய ஒரு புதுப் பெயரை சூட்டியுள்ளார்கள்.

இந்த மாலைகளை ஆண்டவனுக்குச் சூட்டி மகிழ்ந்த ஆழ்வார்கள் பன்னிருவர் அவர்களது வரலாற்றையும், அவர்கள் அருளிச் செய்த பிரபந்தங்கள், பாசுரங்களின் தொகைகள் ஆகிய வற்றையும் தெளிவாக்கிக் காட்டவேண்டும் என விரும்பினார் சுவாமி தேசிகன்.

அவருடைய விருப்பத்தின் விளைவே 'பிரபந்த சாரம் என்ற அருமையான இந்தப் பிரபந்தமாகும்.

இந்தப் பிரபந்தத்துள் பதினெட்டுப் பாசுரங்கள் உள்ளன. இதைத்தவிர முதல் இரண்டு தனியன் பாசுரங்கள் உள்ளன. இறுதிப் பாசுரம், பிரபந்தப் பயன் கூறுவது.

நடுவில் உள்ள 17 பாசுரங்களும், திவ்யப் பிரபந்தப் பாசுரங்களின் வகை, தொகையை விளக்கி ஆழ்வார்கள் வரலாற்றைச் சுருக்கமாகத் தெரிவிக்கின்றன.

இதனை, நாள்தோறும் வைகறையில் இதய பூர்வமாகப் படித்தால், ஆழ்வார்களை வழிபாடு செய்து, திவ்யப் பிரபந்தப் பாசுரங்களைச் சேவித்ததன் பயனைப் பெறலாம்.

திவ்யப் பிரபந்த வகுப்பு நடத்துவதற்கும், இச்சிறு நூலை வெளியிடுவதற்கும் நல்லதொரு வாய்ப்பு அளித்த, திருச்செங்கோடு சன்மார்க்கச் சங்கத்துச் சான்றோர்களை என்றும் மறவேன். அவர்களுக்கு, நீங்க நில்லா நிறைவோடு கூடிய நன்றியனாய் இருப்பேன்.

அன்புள்ள,

அடியேன் **மு. இராமசாமி**

15-10-89

# பிரபந்த சாரம்
## சிறப்புத் தனியன்
### 1

ஆரணநான் கின்பொருளை ஆழ்வார்கள் ஆய்ந்து,அடைவே
அன்புடனே அம்புவியோர் அனைவரும்ஈடு ஏறவென்று
நாரணனார் தாள்களிலே நாலாயி ரந்தமிழால்
நண்ணிஉரை செய்தவற்றை நாடிவகை தொகைசெய்தாய்:
பூரணமா ஞானியர்சேர் பொங்குபுகழ்த் தூப்புல்வரும்
புனிதன்என்றும் பிள்ளைஎன்றும் புவியர்புகழ் வேங்கடவா
தாரணியோர் இங்குஉகக்கச் சாற்றியநல் ப்ரபந்தசாரந்
தனைஉரைத்து வாழுமனம் தந்தருளாய் என்தனக்கே.

விளக்கம்: ஆழ்வார்கள், நான்கு வேதங்களின் பொருளை நன்றாக ஆராய்ந்தார்கள். ஆய்வு செய்த அந்தக் கருத்துக்களை, உலகினர் யாவரும் உய்வு பெறுவதற்காக, அந்த ஆழ்வார்கள், நாலாயிரம் தமிழ்ப் பாசுரங்களாக அருளிச் செய்தார்கள். அருளிச் செயல்கள் அனைத்தும் நாராயணனுடைய திருவடிகளில் மாலையாகச் சூட்டப் பெற்றன. அதனை ஆராய்ந்து, அதனுடைய வகை எவ்வளவு? தொகையாக அமைந்தது எவ்வளவு? என்று கணக்கிட்டுக் காட்டியவர் சுவாமி தேசிகன்.

அவர் அவதாரம் செய்த இடம் 'தூப்புல்' என்ற திருத்தலம். அங்கு முழு நிறைவான ஞானம் பெற்ற நல்லோர்கள் வாழ்கின்றார்கள். அந்தப் பெரியவர்களால் 'புனிதன்' என்றும் 'பிள்ளை' என்றும் புகழப்படுபவர் வேதாந்த தேசிகர்.

அப்படிப்பட்ட, திருவேங்கடநாதன் என்ற இயற்பெயர் கொண்ட தேசிகர், உலகினர் மகிழுமாறு 'பிரபந்த சாரம்' என்ற நூலை அருளிச் செய்துள்ளார்.

அந்தப் பிரபந்தசாரம் என்ற நூலை நாள்தோறும் படித்து உய்வு பெறக்கூடிய மனத்தைத் தமக்குக் கொடுக்கவேண்டும் என்று தேசிகரிடம் பிரார்த்திக்கின்றார் பக்தர்

அ. பொ. : ஆரணம்-வேதம் : அடைவு-முறை : புவி-உலகம் : ஈடேற-உய்வுபெற : நாடி-ஆராய்ந்து : தாரணி-உலகம் : சாற்றிய-சொன்ன (அருளிச் செய்த.)

## 2

ஆதிமறை ஓதிமகிழ் அயக்கிரிவர் தம்அருளால்
அன்புடனே தூப்புல்நகர் அவதரித்தே இங்குவந்த
வாதியரை வென்று, உவந்து வன்புவிமேல் எதிராசர்
வாழ்வுறுநல் தெரிசனத்தை வண்மையுட னே,வளர்த்து
நீதிநெறி தவறாமல் நிறுத்தியிடும் வேங்கடவா !
நேசமுடன் ஆழ்வார்கள் நிலைகளைஎல் லாம்உணர்ந்து,
சாதுசனம் வாழவென்று சாற்றியநல் ப்ரபந்தசாரந்
தனைஉரைத்து வாழுமனம் தந்தருளாய் என்தனக்கே.

விளக்கம் : அயக்கிரீவர் (வெள்ளைப் பரிமுகர்) பழமையான வேதத்தை பிரம்ம தேவனுக்கு உபதேசம் செய்து மகிழ்ந்தவர். அவருடைய திருவருளால், தூப்புல் நகரத்தில் அவதரித்தவர் வேதாந்த தேசிகர். இவர். இராமானுஜருடைய', வைணவ சித்தாந்தத்தை, அனைவரும் வாழவேண்டும் என்ற, வள்ளல் தன்மையோடு வளர்த்து, வேத மார்க்கம் தவறாமல் நிலை நிறுத்தியவர். அந்த இராமானுஜரோ, இந்த உலகத்தில், வாதம் செய்ய வந்த பிற மதத்தினரைக் கண்டித்து மகிழ்ந்த, நிலைபெற்று நின்ற வாழ்வினர்.

இத்தகைய இராமானுஜ வைணவ சித்தாந்தராகிய சுவாமி தேசிகன், ஆழ்வார்களின் தன்மைகளை எல்லாம் அறிந்து, சாதுக்கள் வாழவேண்டும் என்று அன்புகொண்டு பிரபந்தசாரம் என்ற நூலை அருளிச்செய்தார்.

'திருவேங்கடநாதன்' என்ற திருப்பெயர் கொண்ட பெருமானே! இந்தப் பிரபந்த சாரத்தைப் படித்து உய்வுபெறுவதற்குரிய மனத்தை எனக்குத் தந்தருள்க' என்று, பக்தர், சுவாமி தேசிகரிடம் பிரார்த்திக்கின்றார்.

அ.பொ. : ஆதி-பழமை: மறை-வேதம்: உவந்து-மகிழ்ந்து: எதிராசர்-இராமானுஜர்: தெரிசனம்-சித்தாந்தம்: வண்மை-வள்ளல் (கொடைத்) தன்மை: நேசம்-அன்பு.

# 3
# ஆச்சாரியர் வணக்கம்

ஆழ்வார்கள் அவதரித்த நாள்,ஊர் திங்கள்
அடைவுதிரு நாமங்கள், அவர்தாம் செய்த
வாழ்வான திருமொழிகள் அவற்றுள் பாட்டின்
வகையான தொகைஇலக்கம் மற்றும் எல்லாம்
வீழ்வாக மேதினிமேல் விளங்க நாளும்
விரித்துஉரைக்கும் கருத்துடனே மிக்கோர் தங்கள்
நீள்பாதம் நிரந்தரமும் தொழுது வாழ்த்தும்
நேசமுடன் அடியேன்தன் நெஞ்சு தானே. (1)

**கருத்து :** ஆழ்வார்கள் அவதரித்த மாதம் முதலியவற்றைக்கூறும் இந்தப் பிரபந்தசாரம், தடையின்றி முடிவு பெறுவதற்காகப் பூர்வாச்சாரியர்களின் திருவடிகளைத் தொழுகின்றார் சுவாமி தேசிகன்.

**விளக்கம் :** 'ஆழ்வார்கள் இந்த மண்ணுலகத்தில் அவதாரம் செய்தருளிய திருநட்சத்திரம், திவ்யதேசம், மாதம், முன் பின் நின்ற முறை, அவர்களது திருப்பெயர்கள், அவர்கள் அருளிச் செய்த, உலக வாழ்விற்குக் காரணமான திவ்யப் பிரபந்தங்களுள் பாட்டின் வகுப்பின்படி எண்கள், அவரவர் அருளிச்செய்த பாசுரத்தின் கூட்டிய எண், அந்த அந்த பிரபந்தங்களில் வெளியாகும் கருத்துக்கள் எல்லாம், யாவரும் விரும்பும் வண்ணம், உலகில் ஒளிவிட்டு விளங்குமாறு, விளக்கிக் கூறவேண்டும் என்ற நோக்கத்தோடு, முன்னோர்களின் (பூர்வாச்சாரியர்கள்) நீண்ட திருவடிகளை அடியேனுடைய மனம் அன்புடன் இடைவிடாது வணங்கி வாழ்த்தும்' என்று வேதாந்த தேசிகர் இந்தப் பாசுரத்தில் கூறுகின்றார்.

**அ.பொ. :** இலக்கம்-கூட்டுத்தொகை: வீழ்வு-விருப்பம்: மேதினி-உலகம்: நிரந்தரம்-எப்பொழுதும்: நேசம்-அன்பு.

# 4
# பொய்கையாழ்வார்

அருள்மிகுத்த தொருவடிவாய்க் கச்சி தன்னில்
ஐப்பசிமா தத்திருவோ ணத்து நாளில்
பொருள்மிகுத்த மறைவிளங்கப் புவியோர் உய்யப்
பொய்கைதனில் வந்துஉதித்த புனிதா! முன்னாள்
இருளதனில் தண்கோவல் இடைக ழிச்சென்று
இருவருடன் நிற்கவுமால் இடைநெ ருக்கத்
திருவிளக்காம் எனும்வையம் தகளி நூறும்
செழும்பொருளா எனக்குஅருள்செய் திருந்த நீயே. (2)

**கருத்து :** முதலாழ்வார்களுள் முதல்வர் பொய்கையாழ்வார். இவருடைய வரலாறு இதில் உரைக்கப் பெறுகின்றது.

**விளக்கம் :** ஆழ்வார் அவதாரம் செய்த தலம் : காஞ்சீபுரம். இடம் : பொய்கை. மாதம் : ஐப்பசி. நட்சத்திரம் : (நாள்) திருவோணம்: அவதார மகிமை: கருத்துக்கள் நிறைந்த வேதம் விளக்கம் பெற்றது. உலகில் உள்ளார் உய்வு பெற்றார்கள்.

தூயோனாகத் தோன்றிய இந்த ஆழ்வார், முன்பு ஒரு நாள், குளிர்ந்த திருக்கோவலூருக்குச் சென்றார். சென்ற நேரம் இரவு. நின்ற இடம் திருமாளிகையின் இடைகழி. பிறகு பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரும் வந்தனர். நெருக்கம் அதிகமாயிற்று. திருமால் வந்து, இடையில் புகுந்ததுதான் நெருக்கத்துக்குக் காரணம்.

நான்காவதாகப் புகுந்தவரைக் காண்பதற்காக, இந்த ஆழ்வார் ஒரு திருவிளக்கு ஏற்றினார். அவ்விளக்கு வையத்தைத் தகளியாகக் கொண்டது.

'வையம் தகளி' என்ற முதற் குறிப்புக் கொண்ட நூறு பாசுரங்கள் அடங்கிய இவர் அருளிச்செய்த பிரபந்தத்திற்கு 'முதல் திருவந்தாதி' என்று பெயர்.

'புனிதா! அந்த நூறுபாசுரங்களையும் சிறந்த செல்வமாக, எனக்குக் குறைதீர அருள் செய்யவேண்டும்' என்று பொய்கை ஆழ்வாரிடம் விண்ணப்பிக்கின்றார் சுவாமி தேசிகன்.

**அ. பொ.:** கச்சி-காஞ்சீபுரம்: மால்-திருமால்.

# 5
# பூதத்தாழ்வார்

கடல்மல்லைக் காவலனே! பூத வேந்தே!
காசினிமேல் ஐப்பசியில் அவிட்ட நாள்வந்து
இடர்கடியும் தண்கோவல் இடைகழிச் சென்று
இணையில்லா மூவருமாய் இசைந்தே நிற்க,
நடுவில்இவர் ஒருவரும்என்று அறியா வண்ணம்
நள்ளிருளில் மால்நெருக்க நந்தா ஞானச்
சுடர்விளக்கு ஏற்றிய அன்பே தகளியான
தொடைநூறும் எனக்கு அருள்செய் துலங்கநீயே. (3)

கருத்து: முதலாழ்வார்களுள் இரண்டாவதான பூதத்தாழ்வார் நிலை, பேசப்படுகின்றது இந்தப் பாசுரத்தில்.

**விளக்கம்:** ஆழ்வார் அவதாரம் செய்த தலம்: கடல் சூழ்ந்த மாமல்லபுரம் மாதம்: ஐப்பசி. நாள் (நட்சத்திரம்): அவிட்டம் திருநாமம்: பூதத்தாழ்வார்.

இவர் ஒரு நாள் திருக்கோவலூர் சென்றார். துன்பத்தைப் போக்கவல்ல அந்த நகரின் ஒருமாளிகை இடைகழியில் ஏற்கனவே அங்குவந்து தங்கியிருந்த பொய்கையாருடன் கலந்துகொண்டார் பேயாழ்வார் பிறகுவந்து சேர்ந்தார். இணையில்லாமல், மூவரும் இசைந்து நிற்கும் இவர்கள் நடுவில் ஒருவரும் அறியாத வண்ணம் திருமால் வந்து புகுந்து நெருக்கினார். நள்ளிரவில் நேர்ந்த நெருக்கத்தில், குறையாத ஞானச்சுடர் விளக்கு ஒன்று ஏற்றினார் இந்த ஆழ்வார். அது, அன்பையே தகளியாகக் கொண்டது.

'அன்பேதகளியா' என்ற முதற்குறிப்புக் கொண்டதும், நூறுபாசுரங்கள் அடங்கப்பெற்றதும் ஆன இவரது பிரபந்தம் இரண்டாம் திருவந்தாதி எனப்பெயர் பெறும்,

'பூதவேந்தே! இரண்டாம் திருவந்தாதியாகிய நூறு பாசுரங்களையும் எனக்கு விளங்குமாறு அருள் செய்க' என்று, வேதாந்த தேசிகர், இந்த ஆழ்வாரிடம் விண்ணப்பித்துக் கொள்கின்றார்.

**அ.பொ:** மல்லை-மாமல்லபுரம்: காசினி-உலகம்: இடர்-துன்பம்: நந்தா-அழியாத: தொடை-செய்யுள்.

# 6
# பேயாழ்வார்

மாமயிலைப் பதியதனில் துலாமா தத்தில்
வரும்சதயத்து அவதரித்துக் கோவ லூரில்
தூமுனிவர் இருவருடன் துலங்க நின்று
துன்னியபேர் இருள்நீங்கச் சோதிதோன்றச்
சேமமுடன் நெடுமாலைக் காணப் புக்குத்
திருக்கண்டேன் எனஉரைத்த தேவே!உன்தன்
பாமருவு தமிழ்மாலை நூறு பாட்டும்
பழவடியே னுக்குஅருள்செய் பரம நீயே. (4)

கருத்து : இப்பாசுரம் பேயாழ்வாரைப் பற்றிக் கூறுகிறது.

விளக்கம் : பேயாழ்வார் அவதாரத்தலம் ! திருமயிலை நகர் (மைலாப்பூர்) மாதம் : ஐப்பசி. நாள் (நட்சத்திரம்) சதயம் இந்த ஆழ்வார், திருக்கோவலூர் இடைகழியில் பொய்கை, பூதத்தாழ் வாருடன் நின்றபோது, இடையில் புகுந்த திருமாலைக் காண்பதற்கு ஏற்கனவே இருவரால் ஏற்றப்பட்ட திருவிளக்கால் ஒளி தோன்றியது. உடனே, அந்த ஒளியில் இறைவனைக் 'கண்டு. 'திருக்கண்டேன்' என்று பாடி மகிழ்ந்தார் இந்த ஆழ்வார்.

பாக்கள் நிறைந்த அந்த மகிழ்ச்சிப் பிரபந்தத்துக்கு மூன்றாம் திருவந்தாதி என்று பெயர்.

'தேவே ! நூறு பாசுரங்கள் அடங்கிய அந்தத் தமிழ் மாலையாகிய மூன்றாம் திருவந்தாதியை, பழமையான அடியவ னாகிய எனக்குச் சொல்லி அருள் வாயாக' என்று சுவாமி தேசிகன் பேயாழ்வாரிடம் பிரார்த்தித்துக் கொள்கின்றார் இப்பாசுரத்தால்.

அ. பொ. : மா-சிறந்த ; துலா மாதம்-ஐப்பசி மாதம் : தூமுனிவர்-தூய்மையான ஆழ்வார் : துலங்க-விளங்க : துன்னிய-நெருங்கிய.

# 7
# திருமழிசை யாழ்வார்

தைம்மகத்தில் வருமழிசைப் பரனே ! மற்றைச்
சமயங்கள் பலதெரிந்து மாயோன் அல்லால்
தெய்வம்மற்று இல்லைஎன உரைத்த வேதச்
செழும்பொருள்நான் முகன்தொண்ணூற்று ஆறு பாட்டும்
மெய்ம்மிகுத்த திருச்சந்த விருத்தப் பாடல்
விளங்கியநூற்று இருபதும்தப் பாமல் மெய்யே,
வையகத்து மறவாமல் உரைத்து வாழும்
வகையடியே னுக்குஅருள்செய் மகிழ்ந்து நீயே. (5)

**கருத்து :** திருமழிசை ஆழ்வாரின் மகிமையைப் பேசுகிறது இந்தப் பாசுரம்.

**விளக்கம் :** ஆழ்வார் அவதாரம் செய்த தலம்: திருமழிசைப்பதி மாதம் : தை. நாள் : மகம். அருளிச் செய்த நூல்கள் : நான் முகன் திருவந்தாதி. இது 96 பாசுரங்களைக் கொண்டது : சமயங்கள் பலவற்றை ஆராய்ந்து, நாராயணன் அன்றி, வழிபடு தற்குரிய தெய்வம் வேறு எதுவும் இல்லை என்று உரைத்த வேதத்தின் கருத்துக்களை உள்ளடக்கிக் கொண்டது. மற்றொன்று திருச்சந்த விருத்தம். இந்தப் பிரபந்தம் 120 பாசுரங்களைக் கொண்டது : தத்துவார்த்தங்கள் நிறைந்தது.

'திருமழிசை யாழ்வாரே. நான் முகன் திருவந்தாதி தொண்ணூற்று ஆறு பாட்டையும், திருச்சந்த விருத்தம் நூற்று இருபது பாட்டையும், இந்த உலகத்தில் மறக்காமல் உரைத்து வாழக் கூடிய முறையினை அடியேனுக்கு, மகிழ்ச்சியோடு தந்தருள்க' என்று ஆழ்வாரை, தேசிகர் வேண்டிக்கொள்கின்றார்.

**அ. பொ. :** மாயோன்-நாராயணன் : வையகம்-உலகம் : வகை-முறை.

# 8
# நம்மாழ்வார்

முன்னுரைத்த திருவிருத்தம் நூறு பாட்டும்
முறையின்வரும் ஆசிரியம் ஏழு பாட்டும்
மன்னியநற் பொருட்பெரிய திருவந் தாதி
மறவாத படிஎண்பத்து ஏழு பாட்டும்
பின்னுரைத்த தோர்திருவாய் மொழிஎப் போதும்
பிழையறஆ யிரத்தொருநூற் றிரண்டு பாட்டும்
இந்நிலத்தில் வைகாசி விசாகந் தன்னில்
எழிற்குருகை வரும்மாறா இரங்கு நீயே (6)

கருத்து : நம்மாழ்வாரைப் ப ற் றி ய விவரத்தைத் தெரிவிக்கிறது இந்தப் பாசுரம்.

விளக்கம்: நம்மாழ்வார் அவதாரத்தலம்: திருக்குருகூர். மாதம் வைகாசி, நாள்: வி சா க ம். அருளிச்செய்த பிரபந்தங்கள்: திருவிருத்தம். இது, நூறுபாசுரங்களைக் கொண்டது. ஏழு பாடல்களைக் கொண்ட திருவாசிரியம். எண்பத்து ஏழு பாடல் களைக் கொண்ட பெரிய திருவந்தாதி. ஆயிரத்து நூற்றிரண்டு (1102) பாசுரங்களைக் கொண்ட திருவாய்மொழி.

'அழகிய திருக்குரு கூரில் அவதாரம் செய்த 'மாறன்' என்ற திருநாமம் கொண்ட ஆழ்வாரே. நீ பாடி அருளிய. திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு பிரபந்தங்களையும், எந்நாளும் பிழை நீங்க அனு சந்திக்கும்படி அருள் செய்ய வேண்டும்' என்று வேதாந்த தேசிகர் நம்மாழ்வாரிடம் விண்ணப்பித்துக் கொள்கின்றார்.

அ. பொ. : எழில்-அழகு : குருகை-திருக்குருகூர்.

## 9
# மதுரகவி ஆழ்வார்

தேறியமா ஞானமுடன் திருக்கோ ளூரில்
சித்திரையில் சித்திரைநாள் வந்து தோன்றி,
ஆறியநல் அன்புடனே குருகூர் நம்பிக்கு
அனவரதம் அந்தரங்கம் அடிமை செய்து
மாறனைஅல் லால்என்றும் மறந்தும் தேவு
மற்றுஅறியேன் எனுமதுர கவியே! நீமுன்
கூறியகண் ணிநுண்சிறுத்தாம்பு அதனிற் பாட்டுக்
குலவுபதி னொன்றும்எனக்கு உதவு நீயே (7)

**கருத்து:** மதுரகவி ஆழ்வாரின் மகிமையைப் பேசுகின்றது இந்தப் பாசுரம்.

**விளக்கம்:** ஆழ்வார் அவதாரம் செய்ததலம்: திருக்கோளூர். மாதம்: சித்திரை. நாள்: சித்திரை (நட்சத்திரம்) அருளிய பிரபந்தம்: கண்ணி நுண் சிறுத்தாம்பு இது, பதினோரு பாசுரங்களைக் கொண்டது. நம்மாழ்வாரையன்றி, வேறு தெய்வத்தை அறியாத மதுரகவியின் உள்ளக் கிடக்கையைக் கூறுவது.

'மதுரகவி ஆழ்வாரே! நீ முன்பு கூறிய 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்ற பிரபந்தத்துள் உள்ள பதினோரு பாசுரங்களையும் எனக்குச் சொல்லி அருள்க' என்று தேசிகர், ஆழ்வாரைக் கேட்டுக்கொள்கின்றார்.

அ. பொ.: தேறிய-தெளிந்த: ஆறிய-பண்பட்ட: அனவரதம்-நாள்தோறும்: குலவு-விளங்குகின்ற.

# 10
## குலசேகராழ்வார்

பொன்புரையும் வேல்குலசே கரனே மாசிப்
புனர்பூசத்து எழில்வஞ்சிக் களத்துத் தோன்றி
அன்புடனே நம்பெருமாள் செம்பொன் கோயில்
அனைத்துலகின் பெருவாழ்வும் அடியார் தங்கள்
இன்பமிகு பெருங்குழுவும் காண மண்மேல்
இருளிரிய என்றுஎடுத்து இசையில் சொன்ன
நன்பொருள்சேர் திருமொழிநூற்று ஐந்து பாட்டும்
நன்றாக எனக்குஅருள்செய் நல்கி நீயே. (8)

கருத்து : குலசேகரரின் குவலயத்து வாழ்வுப் பெருமையைக் கூறுகிறது இந்தப் பாசுரம்.

விளக்கம்: குலசேகராழ்வார் அவதாரத்தலம்: திருவஞ்சிக்களம். மாதம்: மாசி. நட்சத்திரம்-புனர்பூசம். அருளிய நூல்: பெருமாள் திருமொழி. இது நூற்று ஐந்து 105 பாசுரங்களைக் கொண்டது. 'இருள் இரிய' என்ற முதற்குறிப்பைக்கொண்டது.

இந்த ஆழ்வார், அரசராக இருந்ததால், கையில் வேல் வைத்திருந்தார்: அரங்கநாதன் திருக்கோயிலில் எல்லா உலகங்களின் பெருவாழ்வையும், அடியார்கள் கூட்டத்தையும் காண்பதற்குப் பெருவிருப்பம் கொண்டிருந்தார்.

'குலசேகராழ்வாரே! நீ உரைத்த பெருமாள் திருமொழி நூற்றைந்து பாசுரங்களையும் எனக்கு அருள்செய்ய வேண்டும்' என்று சுவாமி தேசிகன் ஆழ்வாரிடம் விண்ணப்பித்துக் கொள்கின்றார்.

அ. பொ: புரையும்-ஒத்த! எழில்-அழகு: குழு-கூட்டம்: நல்கி-கொடுத்து.

# 11
# பெரியாழ்வார்

பேரணிந்த வில்லிபுத்தூர் ஆனி தன்னில்
 பெருஞ்சோதி தனில்தோன்றும் பெருமா னே! முன்
சீரணிந்த பாண்டியன்தன் நெஞ்சு தன்னில்
 தியக்கறமால் பரத்துவத்தைத் திறமாச் செப்பி
வாரணமேல் மதுரைவலம் வரவே வானின்
 மால்கருட வாகனனாய்த் தோன்ற வாழ்த்தும்
ஏரணிபல் லாண்டுமுதற் பாட்டு நானூற்று
 எழுபத்துஒன்று இரண்டும்எனக்கு உதவு நீயே (9)

**கருத்து:** பெரியாழ்வாரின் பெருமையைப் பேசுகிறது இந்தப் பாசுரம்.

**விளக்கம்:** பெரியாழ்வார் அவதாரத் தலம் : ஸ்ரீவில்லிபுத்தூர். மாதம் : ஆனி. நட்சத்திரம் : சுவாதி. அருளிய பிரபந்தம். பல்லாண்டு. பெரியாழ்வார் திருமொழி. மொத்தம் பாசுரங்கள் : நானூற்று எழுபத்து மூன்று. (473)

பாண்டியன் உள்ளத்தில் ஏற்பட்ட சந்தேகத்தை நீக்கி, திருமால் பரத்துவத்தை நிலை நாட்டி, மதுரை நகரில் யானையின் மேல் நகர் வலம் வந்தவர் இந்த ஆழ்வார்.

'பெருமானே ! நீ அருளிச் செய்த பாசுரங்கள் நானூற்று எழுபத்து மூன்றையும் அடியேனுக்குச் சொல்லி அருள வேண்டும்' என்று பெரியாழ்வாரிடம் விண்ணப்பித்துக் கொள்கின்றார் தேசிகர்.

**அ. பொ.:** பேர்-பெருமை : சீர்-சிறப்பு : வாரணம்-யானை: ஏர்-அழகு.

# 12

## ஆண்டாள்

வேயர்புகழ் வில்லிபுத்தூர் ஆடிப் பூரம்
 மேன்மேலும் மிகவிளங்க விட்டு சித்தன்
தூயதிரு மகளாய்வந்து அரங்க னார்க்குத்
 துழாய்மாலை முடிசூடிக் கொடுத்த மாதே!
நேயமுடன் திருப்பாவைப் பாட்டு ஆறைந்தும்,
 நீயுரைத்த தையொருதிங் கள்பா மாலை
ஆயபுகழ் நூறுடன்நாற் பத்து மூன்றும்
 அன்புடனே அடியேனுக்கு அருள்செய் நீயே. (10)

**கருத்து :** ஆண்டாளது அருமை பெருமைகளைத் தெரிவிக்கிறது இந்தப் பாசுரம்.

**விளக்கம் :** ஆண்டாள் அவதாரத் தலம் : ஸ்ரீவில்லிபுத்தூர். திருத்தகப்பனார் : பெரியாழ்வார். மாதம் : ஆடி. நட்சத்திரம் : பூரம். அருளிய பிரபந்தங்கள் : முப்பது பாசுரங்கள் கொண்ட திருப்பாவை. நூற்றுமுப்பது (130) பாசுரங்கள் கொண்ட நாச்சியார் திருமொழி.

தான் சூடிக்களைந்த திருத்துழாய் மாலையை அரங்க நாதனுக்குக் கொடுத்த பெருமை இந்த ஆண்டாளுக்கு உண்டு.

'சூடிக் கொடுத்த சுடர்க் கொடியே! உனது திருப்பாவை முப்பது பாசுரங்களையும், நாச்சியார் திருமொழி நூற்று முப்பது பாசுரங்களையும் அன்போடு அடியேனுக்கு அருள வேண்டும்' என்று ஆண்டாளிடம் கேட்டுக்கொள்கின்றார் சுவாமி தேசிகன்.



# 13

# தொண்டரடிப் பொடியாழ்வார்

மன்னுமதிள் திருமண்டங் குடிதான் வாழ
மார்கழிமா தக்கேட்டை நாளில் வந்து
துன்னுபுகழ்த் தொண்டரடிப் பொடியே! நீமுன்
துழாய்மாலைப் பணிஅடிமை செய்து, நாளும்
தென்னரங்க மணவாளற்கு அன்பு மிக்குச்
செப்பியநல் திருமாலை நாற்பத்து ஐந்தும்
பன்னியநல் திருப்பள்ளி எழுச்சி பத்தும்
பழவடியே னுக்குஅருள்செய் பரிந்து நீயே. (11)

கருத்து : தொண்டரடிப் பொடி ஆழ்வாரின் சிறப்பினைப் பேசுகின்றது இந்தப் பாசுரம்.

**விளக்கம் :** ஆழ்வார் அவதரித்த தலம் : திருமண்டங்குடி என்னும் திவ்ய தேசம். மாதம்: மார்கழி. நட்சத்திரம்: கேட்டை. அருளிய பிரபந்தங்கள் : பத்துப் பாசுரங்கள் கொண்ட திருப்பள்ளி எழுச்சி : நாற்பத்து ஐந்து (45) பாசுரங்கள் கொண்ட திருமாலை.

'தொண்டரடிப் பொடியே! நீ. திருத்துழாய் மாலையைக் கட்டிக் கொண்டு சென்று அரங்க நாதனுக்குச் சூட்டுகின்ற கைங்கர்யம் செய்து கொண்டு பாடி அருளிய திருப்பள்ளி எழுச்சிப் பத்துப் பாசுரங்களையும், திருமாலை நாற்பத்து ஐந்து பாசுரங்களையும், பழைய அடியவனாகிய எனக்கு அன்போடு அருள் செய்க' என்று பிரார்த்தித்துக் கொள்கின்றார் சுவாமி தேசிகன்.

அ.பொ : மன்னு-நிலையான : துன்னு-நெருங்கிய பன்லிய-சொன்ன.

# 14

## திருப்பாணாழ்வார்

உலகறிய மலிபுகழ்க்கார்த் திகைமா தத்தில்
உரோகிணிநாள் உறந்தைவளம் பதியில் தோன்றித்
தலம்அளந்த தென்னரங்கர் பால், உ லோக
சாரங்க மாமுனிதோள் தனிலே வந்து
பலமறையின் பொருளால், பாண் பெருமா ளே! நீ
பாதாதி கேசமதாய்ப் பாடித் தந்த
சொலஅம னாதிபிரான் பத்துப் பாட்டும்
சோராமல் எனக்குஅருள்செய் துலங்க நீயே. (12)

கருத்து : திருப்பாணாழ்வாரின் திருப் புகழைப் பாடுகிறது இந்தப் பாசுரம்.

விளக்கம் : ஆழ்வார் அவதாரம் செய்த தலம்: திருச்சி நகரைச் சார்ந்த உறையூர். மாதம்: கார்த்திகை. நாள்: உரோகிணி. அருளிய பிரபந்தம்: அமலனாதி பிரான். இது பத்துப் பாசுரங் களைக் கொண்டது.

இந்த ஆழ்வார் அரங்கநாதனுடைய அழைப்பின்படி, உலோகசாரங்க முனிவர் என்ற அர்ச்சகரது திருத்தோளில் ஏறிச் சென்று, அரங்கனைச் சேவித்தவர்.

'பாண் பெருமாளே! நீ அரங்கநாதனுடைய அடி முதல் முடிவரை அனுபவித்த ஆனந்தப் பாசுரங்கள் அடங்கிய அமலனாதி பிரான் பாசுரங்கள் பத்தையும் கூறி அருள்க' என்று திருப்பாண ஆழ்வாரிடம் தேசிகர் விண்ணப்பித்துக் கொள்கின்றார்.

அ. பொ. மலி-நிறைந்த: தலம்-உலகம்: மறை-வேதம்: பாதம்-அடி: கேசம்-முடி: துலங்க-விளங்குமாறு.

# 15

## திருமங்கை ஆழ்வார்

அறிவுதரும் பெரியதிரு மொழிதப் பாமல்
ஆயிரத்தோடு எண்பத்து நாலு பாட்டும்
குறியதொரு தாண்டகம்நா லைந்துஆறு ஐந்தும்
குலாநெடுந்தாண் டகம்எழு கூற்றிருக்கை ஒன்றும்
சிறியமடல் பாட்டுமுப்பத்து எட்டு இரண்டும்
சீர்பெரிய மடல்தனில்பாட்டு எழுபத்து எட்டும்
இறையவனே! கார்த்திகையில் கார்த்தி கைந்நாள்
எழில்குரையல் வருகலியா? இரங்கு நீயே. (13)

**கருத்து:** திருமங்கையாழ்வார் அருளிய திருப்பாசுரங்களின் வகை தொகைகளைக் கூறுகின்றது இந்தப் பாசுரம்.

**விளக்கம் :** ஆழ்வார் அவதரித்த திருத்தலம்: திருக்குரையலூர். மாதம்: கார்த்திகை. நட்சத்திரம்! கார்த்திகை. அருளிய நூல்கள் ஆயிரத்து எண்பத்து நான்கு பாசுரங்களைக் கொண்ட (1084) பெரிய திருமொழி: இருபது பாசுரங்களைக் (20) கொண்ட திருக் குறுந்தாண்டகம். முப்பது பாசுரங்களைக் கொண்ட (30) திருநெ டுந்தாண்டகம்: ஏழு பாசுரங்களைக் கொண்ட திருவெழுகூற்றி ருக்கை: நாற்பது (40) பாசுரங்களைக்கொண்ட சிறிய திருமடல்; எழுபத்தெட்டு (78) பாசுரங்களைக்கொண்ட பெரியதிருமடல்.

'இறையவனே, நீபாடி அருளிய ஆறு பிரபந்தங்களின் பாசுரங்கள் அனைத்தையும், எனக்குக் கூறி அருள்க' என்று திருமங்கை ஆழ்வாரிடம் விண்ணப்பித்துக் கொள்கின்றார் வேதாந்த தேசிகர்.

**அ பொ.:** குலா-விளங்குகின்ற: எழில்-அழகு: குரையல்-திருக்கு ரையலூர்: கலியன்-திருமங்கை ஆழ்வாரின் பெயர்.

## 16

# எம்பெருமானார் இராமானுஜர்.

(திருவரங்கத்த முதனார்)

தேசமெலாம் உகந்திடவே பெரும்பூ தூரில்
சித்திரையில் ஆதிரைநாள் வந்து தோன்றிக்
காசினிமேல் வாதியரை வென்று, அரங்கர்
கதியாக வாழ்ந்தருளும் எதிரா சா! முன்
பூசுரர்கோன் திருவரங்கத்து தமுத னார், உன்
பொன்னடிமேல் அந்தாதி யாகப் போற்றிப்
பேசியநல் கலித்துறைநூற்று எட்டுப் பாட்டும்
பிழையறவே எனக்குஅருள்செய் பேணி நீயே. (14)

**கருத்து:** இராமானுஜர்மேல், 'திருவரங்க முதனார்' என்ற திருப்பெயர் கொண்ட பக்தர் பாடிய இராமானுஜ நூற்றந்தாதியைப் பற்றிப் பேசுகிறது இந்தப் பாசுரம்.

**விளக்கம்:** இராமானுஜர் ஸ்ரீபெரும்புதூரில். சித்திரை மாதத்தில் திருவாதிரைத் திருநட்சத்திரத்தில் வந்து தோன்றினார். அவரது அவதாரம், உலகத்தையே மகிழ்வித்தது அவர் பிறசமய வாதியரை, தம் ஞானப் பெருக்கால் வென்றார்: அரங்க நாதரையே பற்றுக் கோடாகக் கொண்டு வாழ்ந்தார். இத்தகைய எதிராசர் மேல் திருவரங்கத்த முதனார் பாடிய கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் நூற்றெட்டு (108). இது அந்தாதித் தொடையாக அமைந்தது.

இந்த நூற்றெட்டுப் பாசுரங்களையும் பிழை இல்லாமல் தனக்குச் சொல்லியருள வேண்டும் என்று தேசிகர். இராமானுஜ ரிடம் கேட்டுக்கொள்கின்றார்,

அ. பொ: காசினி-உலகம்: கதி-பற்றுக் கோடு: பூசுரர்-அந்தணர்: பிழை-குற்றம்.

# 17

# ஆழ்வார் பாசுரங்களின் எண் - விளக்கம்

எண்ணின்முதல் ஆழ்வார்கள் மூன்று நூறும்
எழில்மழிசைப் பிரான்இருநூற்று ஒருபத் தாறும்
உண்மைமிகு மாறன்மறை ஆயி ரத்தோடு
உற்றஇரு நூற்றுத்தொண் ணூறும் ஆறும்
வண்மையுடை மதுரகவி பத்தும் ஒன்றும்
வஞ்சியர்கோன் நூற்றைந்தும் பட்ட நாதன்
பண்ணியநா னூற்றேழு பத்து மூன்றும்
பார்க்கோதை நூற்றேழு பத்து மூன்றே. (15)

## 1. முதலாழ்வார்கள் :

| | | | |
|---|---|---|---|
| 1 | பொய்கை ஆழ்வார் | பாடல்கள் | 100 |
| 2 | பூதத்தாழ்வார் | ,, | 100 |
| 3 | பேயாழ்வார் | ,, | 100 |
| 4 | திருமழிசை யாழ்வார் | ,, | 216 |
| 5 | நம்மாழ்வார் | ,, | 1296 |
| 6 | மதுரகவி ஆழ்வார் | ,, | 11 |
| 7 | குலசேகராழ்வார் | ,, | 105 |
| 8 | பெரியாழ்வார் | ,, | 473 |
| 9 | ஆண்டாள் | ,, | 173 |
| | | | 2574 |

அ பொ. : மழிசைப் பிரான்-திருமழிசை ஆழ்வார்:
மாறன்-நம்மாழ்வார்:
வஞ்சியர் கோன்-குலசேகராழ்வார்;
பட்டநாதன்-பெரியாழ்வார்:
கோதை-ஆண்டாள்.

# 18
# பாசுரங்களின் எண்கள் தொடர்ச்சி

பத்தரடிப் பொடிபாடல் ஐம்பத் தைந்தும்
பாணர்புகல் பத்துடனே பரகா லன்சொல்
அத்தனுயர் வேங்கடமாற்கு ஆயி ரத்தோடு
ஆனஇரு நூற்றோர்ஐம் பத்து மூன்றும்
மூத்திதரு எதிராசர் பொன்ன டிக்கே
மொழிந்த அமுதர்பாடல் நூறும் எட்டும்
எத்திசையும் வாழஇவர் பாடி வைத்த
இவைநாலா யிரமும் அடியோங்கள் வாழ்வே. (16)

| | | | |
|---|---|---|---|
| | | | 2574 |
| 10 | தொண்டரடிப் பொடி யாழ்வார் | பாடல்கள் | 55 |
| 11 | திருப்பாணாழ்வார் | ,, | 10 |
| 12 | திருமங்கையாழ்வார் | ,, | 1253 |
| | இராமானுஜ நூற்றந்தாதி | ,, | 108 |
| | | | 4000 |

அ. பொ : பத்தரடிப்பொடி: தொண்டரடிப் பொடியாழ்வார்:
பாணர்-திருப்பாணாழ்வார்:
பரகாலன்-திருமங்கையாழ்வார்:
அத்தன்-தந்தை: எதிராசர்-இராமானுஜர்:
அமுதர்-திருவரங்கத்த முதனார்:

# 19
# ஆழ்வார்கள் வரிசை

வையகம்எண் பொய்கை, பூ தம், பே யாழ்வார்,
மழிசையர்கோன், மகிழ்மாறன், மதுர கவிகள்,
பொய்யில்புகழ்க் கோழியர்கோன், விட்டு சித்தன்,
பூங்கோதை, தொண்டரடிப் பொடி, பா ணாழ்வார்,
ஐயன்அருட் கலியன், எதி ராசர் தம்மோடு
ஆறிருவர் ஓரொருவர் அவர்தாம் செய்த
துய்யதமிழ் இருபத்து நான்கின் பாட்டின்
தொகைநாலா யிரமும்அடி யோங்கள் வாழ்வே (17)

**விளக்கம் :** ஆழ்வார்கள் பாடிய பிரபந்தங்களின் தொகை இருபத்து நான்கு (24) பாசுரங்களின் தொகை நாலாயிரம் (4000) இவைகள் தான், அடியவர்களாகிய நாங்கள் உய்வு பெறுவதற்கு வாழ்வளிப்பனவாகும்.

அ. பொ. : மழிசையர் கோன்-திருமழிசை யாழ்வார்:
மாறன்-நம்மாழ்வார்:
கோழியர் கோன்-குலசேகராழ்வார்:
விட்டுசித்தன்-பெரியாழ்வார்:
கோதை-ஆண்டாள்: கலியன்-திருமங்கைஆழ்வார்:
ஆறிருவர்-ஆறு+இருவர்: பன்னிரண்டு ஆழ்வார்:
ஓரொருவர்-ஓர்+ஒருவர்-இராமானுஜர்:
துய்ய-தூய்மையான.

# 20
## பிரபந்தப் பயன்

அந்தமிலா ஆரணநா லாகி நின்ற
அதன்கருத்தை ஆழ்வார்கள் ஆய்ந்து எடுத்து
செந்தமிழால் அருள்செய்த வகைதொ கையும்
சிந்தாமல் உலகங்கள் வாழ வென்று
சந்தமிகு தமிழ்மறையோன் தூப்புல் தோன்றும்
வேதாந்த குருமொழிந்த ப்ரபந்த சாரம்
சிந்தையினால் அனுதினமும் சிந்திப் போர்க்கு,
சேமமதாம் திருமால்தன் கருணை யாலே. (18)

**கருத்து :** 'பிரபந்த சாரம்' என்ற இந்த நூலைப் படிப்பதனால் கிடைக்கும் பயனைப் பற்றிப் பேசுகிறது இந்தப் பாசுரம்.

**விளக்கம் :** ஆழ்வார்கள், முடிவு இல்லாத வேதங்களின் கருத்தை ஆராய்ந்தார்கள் : ஆராய்ந்த அந்தப் பொருளை எடுத்து செந்தமிழில் அருளிச்செய்தார்கள். அதனுடைய வகைகள் இவ்வளவு : தொகைகள் இவ்வளவு என்று ஆய்ந்து சொன்னவர் வேதாந்த தேசிகர் இவர் மிகுந்த தமிழ் மறையோன் என்று போற்றப்படுபவர் : தூப்புல் என்ற திருத்தலத்தில் அவதாரம் செய்தவர். உலக நல்வாழ்விற்காக, 'பிரபந்த சாரம்' என்ற நூலாக இதனைச் செய்தார் தேசிகர்.

இதனை, நாள்தோறும் மனப் பூர்வமாகச் சிந்திப்பவர்களுக்கு, திருமாலுடைய அருளால், நல்வாழ்வு உண்டாகும்.

சுவாமி தேசிகன், தம்மைத் தமிழ் மறையோன் என்று சொல்லிக் கொள்வது, இவர் தமிழ் மொழியிடத்தில் எவ்வளவு பற்றுக் கொண்டுள்ளார் என்பதைக் காட்டுகிறது.

**அ.பொ.:** அந்தம்-முடிவு : ஆரணம்-வேதம் : சந்தம்-அழகு : அனுதினம்-நாள்தோறும் : கருணை-அருள்.

## ஆசிரியரின் பிற நூல்கள் :

1 இராமாவதாரம்

2 ஓவியப் புரு

3 படிவங்கள் எப்படியோ ?

4 வள்ளல் நாயகி

5 வைணவக் களஞ்சியம்

6 நெய்க்குடம்

7 என் சிந்தனைக் குறிப்பின் ஒப்புமை மலர்கள்

8 விவேகாநந்தரும் தேசியமும்

9 பாரதி கண்ட பாரதத் தாய்

10 ஆழ்வார்களின் அருளிச் செயல்

11 தினசரி தியானம்

12 வாழித் திருநாமம் விளக்கம்

13 கம்பனும் சடையனும்

14 நாராயண கவசம்

15 தேசிய காப்பியம்

16 திருமணப் பாமாலை

17 ஆர்வவிளக்கு அம்மணியம்மாள்

18 தெய்வ மாக்கவிகள்

19 தேசிகர் அடிப்பொடி